பேதுற லின்றி மாதுட னமர்ந்த
திருத்தகு படிவங் கருத்துட் படாஅ
தஞ்சுதக் கனசெய் தரும்படர் விளைத்த
பதகர் வாழ்க்கை யிடமும் மதிளோ
டங்கியங் கடவுட் கார்த்தமு தாக
மூடிய நுதல்விழி ஞெகிழ்த்து மூவர்க்
கொப்பிகந் துய்தி யுறுத்துமெம் பெருமா
னூனுழை புலத்தா னுணுகியாய்ந் தெய்த்துப்
படுபசிக் குடைந்தோன் பதம்வேட் டாங்குத்
தன்னடிப் படூஉம் பருவத் தாபத
ரருண்மிகுசெம் பொருள்பெற்றுத்
"தன்னை யுன்னி யென்னை யாக்கிய
போழ்தே யானவ னாயினே" னெனாஅப்
பிறிபடா வின்பப் பெருக்கிற் றிளைப்பா
னருண்மடை திறந்து கரமலர் மருமத்துச்
சேர்த்தி யாரரு ளல்கிய செம்ம
றிருநுதற் கிளர்ந்த விழியிற் றீப்பொறி
சூர்த்த நோக்கிற் சூர்துய ராற்றிப்
பெருவளங் கொண்டு பேணக் கடுஞ்சிறைப்
படுத்தலி னுய்யாக் கடவுளர் தந்நோய்
தவிர்பாக் கருளுருக் கொண்டநந் தலைவ
னறுமுகப் பெருமான் றிருமகண் மருகன்
விலங்கலி னியாதுங் கலங்கா மள்ள
ரூக்கிய வுழப்பி னொருநிலம் படுத்து
வெள்ளி யன்ன மேனீர் தேக்கிப்
பானிற மோவாத் தூநென் முளைவித்து
விளைநிலம் பிறகோட் படாது மிளைசெய்
தருந்தவ மகப்பேற் றன்னையிற் பேணப்
பணைத்து விறந்து பயின்று கடைகுழன்று
படர்ந்த பயிர்தான் பச்சென விடையிட்

டொருநெறிப் பொன்செய் தாமரை யுயர
வெரிகிளர்ந் தன்ன திருமலர் வாய்விரித்
தாழ்வரி ஞிமிறொடு பணிந்துசூழ் கிடப்பச்
சிதல்படு மருங்குற் றிறல்படு வாளை
கவைத்தா ளலவன் களித்துவாழ் தோற்றந்
திவளொளி மரகதப் பந்தர் செய்து
பொலஞ்செய் கூம்பு மீமிசைப் பொருத்தித்
தெள்ளத் தெளிந்த வொள்ளொளி விளக்கம்
பாங்குற நீறீஇப் பான்மை யோவா
துள்ளகம் வாழ்வுற் றுலாஅய்த் திரிந்து
செருக்கிய திருவளர் செல்வர் போலும்
வளவயல் சுலாய வளவில்சீர்ப புலிசை
மாநகர்க் கரையன் வரிபாண் முரன்று
தேனுகர் கடம்பன் சீறடி பரவுதூஉ
முத்திறப் பகுதி முடியா வறப்பய
னார்த்திய தெய்வதஞ் சிலவே யதாஅன்
றிருதிறப் பகுதி யிகவாப் பொருணல
மளித்திடு தெய்வதஞ் சிலவே யதாஅன்
றொருதிறப் பகுதி யுலவா வின்பஞ்
சேர்த்திய தெய்வதஞ் சிலவே யென்ப
வவற்றுள், காட்டத் தனருன் காணு தொளித்தாங்
குண்ணிலை யாகி யுவர்செயன் முற்றித்
தானெப் பொருட்குஞ் சார்பென நின்று
தற்கொரு சார்புந் தழாது நின்ற
நுண்மை மாட்சி நொந்தா வொண்சுடர்
நீயே யின்றிப் பிறிதின் றூத
லமிழ்தூண் மடுத்த விமையவர் குழாமும்
வீடரும் பேரவா முடிவு போகப்
பல்வரப் பேற்றின் வெல்சூர் முதலுங்
காண்வர நிறுத்த காட்சியிற் றெளிதுங்

திருவருட் குறிப்பின் றுண்டே போலு
மாகலிற் பெறலரு மன்பீங்
குடற்பயன் பெறுமா றுதவு கென்றே. (கக)

## மாலைவேட்டல்.

என்றே பெறுவே னெழிலார் குகப்பெருமான்
கன்றே குணிலாக் கனியுகுத்த—வன்றனது
மாமருமான் றென்புலிசை வாழ்பெருமான் றோட்கிடந்த
தேமருவு தாருதவுஞ் சீர். (உ0)

## காமமிக்ககழிபடர்கிளவி.

உற்றிடத்தன்பருதவியைக்காணுவரொண்புலிசைத்
துற்றிடத்தார்ந்தகுமாரற்கெனது துயரமெல்லாங்
கற்றிடக்கூறிலிர்மான்காளளியினங்காள்விழிபோற்
பெற்றிடக்கற்றனிரீரோ நுமக்குப்பெருமையதே. (உக)

## கடலிடைவைத்துத்துயரறிவித்தல்.

பெருந்துய ருழந்து பீடிலா தலமந்
தலைகிய மாக்க ளலைதொழிற் றுய்த
லுள்ளுறை யாக வுரைகிளத் தழிமற்
றவர்குறை பெய்த லந்தண் ணறிவே
கவன்மிகு மனத்தோ ரிங்கிதங் காணூஉ
வவர்குறை பெய்த லறிவினுக் கறிவே
யலறி யலறி யாற்றி யாற்றி
யுரைப்பவுங் கேளா தூடறுத் தோப்ப
விளிவே யிங்கிலை தானு மின்றித்
துன்பினர் நுகா மறுவலுந் துன்பே
யினைய வியற்ற விளிவினு மிளிவே
முன்னிலை யிரண்டுந் தந்நிலை யென்னக்
கருதி னேரே பெருநீ ராள
ராளப்பருங் காட்சி வளப்பெருங் கடலே

மின்னொளி சான்று கொன்னே யுறிக்
கைம்மாறு கருதாது காசினி யும்மார்
பெய்து நலம்படுத்த பேரா வெழிலி
யுண்டுதேக் கெறிய வுதன்பசி சிந்தலிற்
சிந்துவென் றொருபேர் சிறந்தனை யன்றே
முடிக்கரும் பெருநோன் படிக்கடி நோற்றுநல்
லறம்புரி வினைமேற் கொள்ளலிற் றிரம்பா
துறுபய னிவனன் றொன்று மின்றே
தண்டளிர் முட்டாட் டாமரை பாய்ந்தங்
கிருகயல் புரண்டன்ன விணைவிழி முகனு
மெலிந்து நைதல் கண்டுமேன் மேலா
வரும்வலி யாளரின் வளர்முலை மேலெழு
வுதுதனைக் கண்டுள் ளுடைநரின் மாதோ
தேய்ந்தழி மருங்குலு மேய்ந்தன பிறவுங்
கதிப்பக் கொண்டிவள் கவினு மின்னுன்
றொருதனித் தலைமைக் குருபாற் குறித்துக்
கண்ணிலா தியாருங் கையகப் படூஉத்
திரிதரு மாறே மறுக்கஞ் செய்யு
மயற்றளை தளைஇய வைம்புலத் தயர்வு
தபுக்க வேண்டுநர் தன்வச மழியா
நெஞ்சநனி நெகிழ்ந்துருகிப்
பாடு கிடந்த பாங்கமர் பொன்மன்
றிடங்கொண் டருளு மெந்தா யெந்தாய்
வீறுபடு குன்ற நீறுபட வெறிந்த
வைவே லெடுத்த தெய்வதக் குரிசி
லாருயிர்க் குயிரே யன்பருக் கெளியோ
யென்று பிதற்றி மன்ற னெய்தலிற்
பொலிந்த வுண்கண் கலுழ்ந்தன ளாகி
நோத லானுப் பேதையா யினளை
மன்னுதற் கரிய வென்னரும் பேற்றை

வருகுடிக் கேற்றிய வொருமணி விளக்கைக்
கட்புலன் சுவைகொள் விட்புலத் தமிழ்தை
யுலவா நீர்மைச் சலதிதி யெனப்பட்
டாசுபுரி துயர்செய் யம்புராசி வயின்பெற்
றோஒவென் றலறி யொப்பில் கடுந்துய
ருறுத்தி யார்கலி செய்குதி மன்ற
பொன்னரி மாலை துன்னித் துயல்வரூஉந்
திண்ணெ னெடும்புய விண்ணவர்க் காரமிழ்
தருள்பெருங் குணமிகு மந்தண் மதிப்போர்க்
கணவற் கண்டுழி களியாட் டயர்ந்து
மல்லுழி யிரங்கி யலக்கணுற் றழிந்து
மணந்தன ரின்புந் தணந்தனர் துன்பு
மிற்றென நுகர்ந்து தெற்றென் றறிதி
யிதனை, னுனித்துணர் குறிப்பின் றேனுங் கூறலின்
றாள நிரைத்த மரகதப் பைந்தொடித்
தாங்கக் கரத்திற் றவிராது தழீஇ
நாவா யியக்கி நாமவேன் விடலையை
யிருகண் களிக்க வெம்முற் செலுவா
திருப்பது பெருநீ ரென்றொளிர் நிற்கு
மீக்குயர் விழுச்சீ ரன்றே யன்றே
நின்னுழை யவிரும் பேரொலி நிலத்தமை
பொருளொடு புணராப் புன்மைய தென்பது
பெய்தொடி யெங்கைக்கு மெய்யா காதே
யுன்பா லொன்று முறையா ளாகப்
புன்க ணியற்ற னன்கா மேகொ
லகன்றலை யுலகின் றகுநலங் காத்துநீ
லாடை யென்னப் புடைபோ யுராஅய்
நீரிகந் தறியா வாரிதிப் பெயரோய்
கல்லென் றிரங்குங் கொல்லொலி யமைத்துக்
கேழ்கிளர் மாமை கிஞ்சுகச் செவ்வாய்ப்

போழிள மதிநுதற் றாழிருங் கூந்தன்
மடந்தை தனித்துறு படர்மி காஅது
நினைந்துள மிரங்குநை யாகிற் புனைந்து
பலர்புகழ் பரப்பிய பரவை
நீயே யென்று நிற்பணி குவெனே. (உ௨)

### அருணிலைகிளத்தல்.

நிறுவாது நெஞ்சந் திருகினார்க் கில்லை
யுறவாகத் தன்னடியே யுள்கிப்-பிறவாற்
றிலவா மனமுடையார்க் கின்பருளும் பொன்னம்
பலம்வாழ் குமரன் பதிந்து. (உ௩)

### சென்றோனீடலிற்காமமிக்ககழிபடர்கிளவி.

பதிதந்தகாதலர்நின்பெயரோதிப்பயன்பெறுமவ்
விதிதந்தவாற்றிற்பெயர்ப்பொருளாகியவெள்ளனமே
ததிதந்துநீங்கிலேமென்றார்புலிவாழ்தனிக்கடறே
வதிதந்தவேட்கென்றுயர்கிளவாமைவழக்கல்லவே. (உ௪)

### தோழிதலைவிஆற்றமைகூறிவரைவுடம்படுத்தல்.

வறனுற லென்றும் வையக மறியா
தாறறிந் தான்ற நான்மறை கூறி
முத்தீ வேள்வி முறையுளி முற்றிய
வாறுதொழி லாளர் மூன்று பருவத்து
மனுவொடு தங்கா மாநீர் விடுத்தென
மும்மழை பெய்யு முறையிற் பிறழா
நீணிற மங்கு னீக்கற நிறைந்து
காலம் பொய்க்காது மேலுறை பிலிற்றுங்
கோடுபல கிடந்த பாடமை வெற்ப
வைதுபடு மருங்கு லம்முலைக் கொடிச்சியர்
வெளிறடிந் தடுதீ விழியிற் சிதறிக்
கடாம்படு களிற்றுக் காழ்கோட் டுலக்கை

யைவனங் குறுவ வங்கை சேப்பப்
பற்றிப் பாடும் வள்ளைப பாட்டு
மாய்சிறைப் பாய்புள் வெருவத் தூய்மணிக்
கற்கவ ணூக்கிக் கடியுமா லோலமுங்
கடநா றுதலாற் கழியவும் வெகுண்டு
பன்மலர் துவன்ற வேழிலைம் பாலை
யூடுறப் பாய்த்துக் கோடுபுய்க் கல்லாக்
களிறு துணுக்கென்று பிளிறத் தெழிக்கும
வரிவில் வேட்டுவ ருரைபெறு துழனியுங்
குறிபடா திரங்குங் குறிச்சிக் கிழவ
நீளொளி மன்றிற் குமர வேளே
இவள்தான், சைவல மென்ன மைவளங் கொண்டு
பாளையி னேர்ந்து வார்ந்தசீ ரளகங்
கூட்டி நறைகமழ் புழுகுநெய் யட்டி
நிரைநிரை யாகப் பிரிவு படுத்துப
பழுதொன் றின்றி வழுவழுப் பாகக்
கொண்டையுஞ் சுருளுங் குழலும் பனிச்சையு
முடியு மெனவைம் பாற்படுத் தின்ன
மன்னே முடிக்கு மவ்வள வன்றித்
தானே முடிக்குந் தகவறி யாளே
கயத்துறை வாழ்க்கைக் கயலிற் பிறழ்ந்து
மயக்குறு மதனன் மதுகைகுறி யாதே
பாயரி படர்ந்து சாயன் மிகூஉத்
தாமரை புரைந்துங் காமஞ் செய்யாதே
மையூ றுண்டு மதர்த்துக் களித்து
நீலென நின்றுங் கோறல் புரியாதே
பெருமநின் றடக்கை வரிவேல் போன்று
மாடவர் மார்பத் தாடுரு வாதே
மடமான் பிணையின் மருளுநோக் கினளே
நாறுகர் வில்லா தஞ்செவி கூட்டுணு

மமிழ்திற் சிறந்து மழலை நிரம்பாளே
யுளதில தென்றங் குட்த்துணர் நுசுபவை
வருத்தக் கல்லாது வருமுலை யினளே
யாதலை யென்னவுங் கருதா தனையவ
ளூட்புகு தந்த கள்வ கேணீ
கம்மியன் புனையா யாணர்க் கவினு
ளகப்படுத் தார்த்த வஞ்ஞான் றுதொட்டு
மெய்வரு மின்பங் கைவந்து கிடைப்பான்
பொருள்கோ ளளவையிற் போக்கின்று முடிந்த
வாசறு காட்சி யையர் போன்று
வள்ளவா யுள்ளத் தாமரை வாய்ப்பச்
செம்மா னீயே சேக்க நிறுத்துத்
தன்செய லற்றுத் தகவுபிறி தாகி
யுரைகல் லறியா தெரிதவழ் கொங்குரைத்
தேசுகெழு மேனி மாசொடு படீஇப்
புற்கென் றம்ம புலர்ந்து சிதர்ந்த
வேங்கை வீயின் வெறிதுடீர் பூப்பக்
காதற் பேரிற் கதழ்ந்த வெந்தீ
பஃறலை விரிந்து பல்கல் வேண்டி
நாசித் துருத்தி பெருங்காற்று நல்க
விருமையிற் பொலிந்த விரிகட லுண்கண்
பாஅனித் திலமெனத் தூஉ நீர்த்துளி
படர்முலைக் குன்றிற் றடக்கிச் சிதறப்
படுகதிர் விரிந்த பரிதிமுது வேனி
னடுநின் றழன்று நண்பகற் றெறுதலிற்
செழுவிய பூங்கொடி தழைமுகந் துவளச்
சாய்ந்தெனப் பாண்டிற் றூய்திற் பரப்பி
மெத்தென விரித்த கிடையிற் கிடந்து
புகலா வின்பிற் றலைகாட் புணர்ந்த
வுன்னத் தானு முருவெளி யானு

நோக்குந வெல்லா நின்னே போறலி
னுயிரினுஞ் சிறந்த வளபபரு மியற்கை
நாண மென்ப திம்மியும பூணு
தறிந்தாங் கெலாம்வாய் வாளா தரற்றிப்
புலம்பு கூர்ந்த பொன்னியற் பாவை
பேய்கோட் பட்ட பெற்றிய ளாக
மாறி யறிந்த செவிலிய ரானோர்
தேவ ராளனிற் றெய்வம் வாழ்த்தித்
தந்நினைவு முடியுமா றின்றி யினையச்
சிறிதே முகிழ்த்த வலர்நனி பரந்து
பெருஞ்சொல் லாகி யாங்கணும் பேச
நயந்துணை யானும் புனைந்துரை யானு
நின்மண வாள ரின்னே போதுவ
ரென்றுபல கூறினு மிசையா ளன்றே
யிமிழ்திரை யுலகத் தமிழ்தென் மதியு
மென்றளிர்ப் பயினற தென்னிளங் காலும்
விண்முடி மலயத் தண்ணென் றேய்வையும்
பிறவு மனற்றலிற் சாம்பிய பேதைக்
குலம்பெறு தடந்தோட் குலமலை பிறந்த
மெல்லிய லூற்ற மொன்றே சொல்லக்
குறியெதிர்ப் பில்லா தருணிறைந் திருந்து
புடைபெயர் கடைக்கண் ணென்றே கெடலிற்
சேண்மருந் தாக வுளங்கொளல் வேண்டு
மிமையச் செல்வி யுமையவ டனூஉ
தன்பு பெருக வசம்பூறு மொழியோய்
கீரன் பனுவ லாரமு துண்டு
மற்றவற் புரந்த வெற்றவழ் வேலோ
யிருபெண் புதுநல மிளையாது நுகர்ந்தோ
யினியன யாவு மிடர்மிக் குறுத்தலி
னினியவற் றினிய விறைவலிப் போழ்து.

புறக்கணித் தனையேற் பூவைக் கேர்நலம்
பிழைபா டுறலிற் பெரிது
மனனிரங் குதனின் றனதருட் குறிப்பே. (உரு)

### அருமைசெய்தயர்ப்பத்தலைவிகூறல்.

சூலமலைக ளெல்லாங் குலாவுற் றிருந்தும்
மூலமலைகண் மேவ முயங்கி—யலமாலெற்
கீந்தேகன் மாண்போ வெழிலார்சிற் றம்பலத்து
வேந்தே தனியிருக்க வே. (உசு)

### அருணிலைபெறுதலரிதெனாதித்தல்.

இனையாதொருபடித்தாயுட்புறம்புமிகப்பறவே
நனையார்மலர்தூய்ப்பழிச்சுநர்க்கன்றிநயக்கருண்மோ
சினையாக்கணித்தனங்காப்புற்றமுத்தஞ்செறிக்குமொரு
வனையார்தடத்தில்லைவேலோனடித்தாமரைமலரே. (உஎ)

### வேட்கைநிலையுரைத்தல்.

தாதுகூட் டுண்ட ஞிமிறினஞ் சார்வு
பிறுஅண் டின் றென்று பெரிதுளந் தருக்கி
யுறைந்துவாய் மடுப்பா னறைத்துளி தூஉய்த்
தேனிரூல் கிடப்பத் திசைமுகன் பராவி
நீக்கறச் செறித்த மீக்கிளர் தண்டலை
யாருயிர் வருக்கம் பேறெனத் துய்த்தங்
கிறுமாப் பாகக் கிரணவின் சுதைதரீஇ
வான்மதி கிடந்த வானங் காட்ட
வம்மென் சீறடி யரிவையர் குழூஉக்கொண்
டிணைதபு பெருநல மெய்த வேட்டுச்
சேண்விளங்கு சிறப்பின் மாணிலை நோற்றலை
நிரைசால் பல்சினைக் குரவினங் காட்ட
விழைதகப் பொலிந்து குழைதளி ரீன்று
நுண்முகைச் சிறுவீ நுனித்தலை யரும்பிச்
சிறிதசைந் துலாய வடுவீன் றேமா

பொன்னுருக் கன்ன போதுசெய் பூங்குமிழ்
பவளத் தன்ன திவள்பூ முருக்கு
வெள்ளி திரண்டன்ன நித்திலம் வெடிப்பப்
பைங்குலை சுமந்த நெட்டிலைக் கமுகு
சின்னஞ் சிறிய நலந்தரு நர்க்கும்
பென்னம் பெரிய நலம்பெற வருள்வான்
பாராட் டெடுத்த சீரார் கடுப்பத்
தண்சுவை யிளநீர்த் தாங்கிய தெங்கு
தாதவிழ் மலர்ச்சுமைக் காற்றா தொதுங்கி
மெல்லென் றசைஇய முல்லைக் கொடியு
மதன்க ணிறுத்த மழையு மதியும்
பாகென மிழற்றுங் கோகிலப் புள்ளுங்
காதள வோடிக் களித்த விழியே
நாசியே யிதழே காசின் மிடறே
தசைந்திடுவெம் முலைதானே
யிதன்பொறையா லெளிவந்து
நிலையில்லா துலைமருங்கே
வம்பவிழு மைம்பாலே
களங்கில்லாக் கவின்முகமே
கேட்டொறு மின்பங் கிளக்குதே மொழியே
யென்றாங்கு, ஞாபகக் கருவியி னங்கைய ருறுப்பை
யுணர்த்தப பொழில்வளம் பொலிமே யொருபாற்
றிசைக்கூலத் திரளிறங்கு
மரக்கலங்க ணிரைநிரையா
வுலாவியநீ ரலைவரம்பின்
விட்டுவிட் டெழுந்த புளின முகட்டுப்
புலவுமணங் கான்ற புன்வலை யுணங்கும்
பரதவர் முன்றிற் சிறுகுடிப் பயின்று
வாழ்வுறு மகாருங் கோழிள மீன்பறைத்
துயிரிழந் தொழிவ துவப்பிற் காணு

மறவினை நீங்காது வளர்கழிக் கரையில்

மேனியொடு வானோக்கி
யொருவினை யுள்கா தருளே வேட்டு
"நிலையிற் றிரியா தடங்கியான் றோற்றஞ்"
சிறுவீழ்த் தாழை தெரிக்கு மொருபா
லென்று புறங்கிடந்த வுள்ளகத் தென்று
மிழுக்கா விழுக்குலத் திம்பரின் வந்தாங்
கருமறை யோதி வருமுறை திறம்பா
றொழுக்கிற் சிறந்துமற் றொருமையி னிருமையின்
புதவு மாற்றிற் பிரமா முதலா
வினைமா ணறிவினர் வினைத்தலை நிறுத்து
வேறுவே றுருவிற் கூறுபடு குண்டத்
தவிர்தரு மெழுநா வங்கியின் வேட்டு
மாவுதி யானு மவிசதத் தானும்
வெய்யோனான் மிகவெதும்பு
மாதிரங் குளிர்ந்து மாவளம் பூப்பத்
திருவருள் செய்கென்று தெய்வம வாழ்த்தித்
தன்வினை பிறவினைத் தலைமைமிக் கேன்ற
மூவா யிரரெனு முனிவரர் நாவாற்
கூறற் கொல்லாக் குணப்பெருந் திருவினர்
சீரியற் றமிழுட னாரிய முணர்ந்த
திட்ப வறிவின ரொட்பமிக் குடையர்
திருநடப் பெருமா னிவர்தமு ளொருவன்
யாமென வுரைத்தற் காந்தவப் பேற்றினர்
தொழுகையி னிருக்கு மொழியிற் பழிச்சத்
தடம்பெறு வெளியுட் குடம்பை போல
நிலைபெறூஉ மலர்தலை நிலத்துயி ரெல்லாந்
தந்தொழின் வகையின் முந்துடன் முதற்பெற்
றொழியாது கறங்கு மொருபடம் போறலி

னலம்பெற வேட்குநர் நலனே யுளுற்றுப
வதுதா, னிற்றென் றறிவுகொள லெண்ணமைய தன்றாற்
கண்ணொளி கஞலக் கதிர்க்கு மொளியிற்
குலநலம் வழாஅக் குறிதலை மிலைந்து
நன்மன னெகிழ்ந்து சொன்முறை தெருட்டி
யங்கையி னொல்லியி னங்கலத் தளித்த
நுகத்தலைப் பகலி னுந்தாச் செங்கோன்
மனுவழித் தோன்றல் கொடுவரி புனையத
ஞூஉஇய யாக்கை யொண்டவப் புலியனு
லறிவறிந் தான்ற விரணிய வருமன்
வைதிக சைவ முதுநிலை திறம்பா
நெறிகடைப பிடித்த வறிவு ளோரு
நினைந்த வாறே படிவம் புனைந்து
பிணங்கிய கொள்கைச் சமயக் கணக்கரு
முடற்பொறை வீந்து வுயிரிற வரினு
மழியா மான மதுபுரக் குநரும்
புலம்பட வுணரிற் பொருளிற் சிறந்த
நலம்படு பொருடா னவிறற் கில்லென்
றதுதொகப் பண்டமாற் றுதிசெய் குநருந்
தாளாண்மை யொன்றே தலைமைய தெனாஅ
வேளாண்மை யாற்று மேதக் கவரும்
புறக்குடி மூன்றும் பொருந்து மாற்றின்
வாழ்வுபெற வைத்த மறுகுபல போக்கி
யைம்பெருந் திணைபு ளரும்பொரு ளுறுது
நிரம்பி வழங்கு நியமமும் பிறவும்
வல்லாங் கெழிலின் வகைஇச் சொல்ல
வொன்றினென் றுவ்வா வொண்கதிர்க் குருமணிக்
கூம்பொடு வெள்ளிக் குன்று குயின்றன்ன
மிகுநிலை மாளிகை யியற்றி யகவயிற்
பரிதிமுகந் தடவிய விடைக்கொடி பரித்த

புரிமுக மாயிடை மண்டபம் புனைதந்
தெம்மவ ராணவக் கறையிரு ளொதுக்கி
யுலவாப் பேரின்ப வீட்டு ளுறைவா
னருணெறி முறைசெய்து கொலுவீற் றிருப்பப்
பொன்வேய்ந் திட்ட நன்ன ரத் தாணி
யென்று முவந்த குன்றக் கிழவ
கடிநறை யசும்பிக் காவதங் கமழு
மலர்த்தவி சிருந்த மாமறைக் கிழவ
னிணைதீர் செருக்கி னெழுச்சி நோக்குபு
மறைமுதன் மனுவின் பொருட்டிறம் வினாஅய்
விடைநிறுத் தாதான் முழைஞ்சிலின் விடுத்துப்
படைப்புப் படைத்த கடவுளேறே
யமரர்க் கருளிய குமர நாயக
வென்று மொருபடித் தாய்நிலை பெறுவதூஉ
மனைத்து மூடுருவி நின்றளந் தறிவதூஉ
மெழுவா யிறுவா யின்றின் பாவதூஉ
மெனுமுத் தகுதிப் பெற்றியை யேனுந்
தாமறி யளவையிற் றம்மகத் துன்னூஉப்
போற்றுநர்க் காங்கே பொருக்கென வெளிவந்
தவர்குறை முடிப்பா னவர்குறித் தாங்கு
நிகழுருக் கோடலு நிலைஇய பண்பே
யதனாற், பண்பு தொகுதலொடு வினைதொகு பான்மை
யாறு முகனுந் திருவரு டதும்பி
வழிய விழித்த பன்னிரு விழியு
மறவருள் குறிக்குந் திறநிலை யோவா
வைவேன் மறிந்த வரையகன் மார்பு
மையிருட் பிழம்பி னெய்யெனத் தோன்று
மிருகதி ரென்ன மயின்மிசைக் கிடந்த
திருவடி யிரண்டு மரிவைய ரிருந்த
விருமருங் குடனே யெமதுகண் காண

வுலகப் பொருளைப் புலனுறக் கண்டும்
போக்கற் றிருந்து நீக்கறத் தேர்ந்து
மின்னு நுகர்வி னிடர்மிக் கிரங்கி
நன்னர் நுகர்வி னசைமீக் கூர
வதுவது வாகிநின் றழுங்குநெஞ் சொருங்கி
யெற்றவ வுள்ளக் கோயிலிற் சிற்றம்
பலமெனும் பதுமம் பில்குபே ரின்பத்
தேனுகர் வண்டிற் சிவணிக் குகனென
நிற்கண் டுறைப்ப நல்குமதி நிகரின்
றிழுமென வொழுகிய வமிழ்துறழ்
செந்தமிழ்ச் சங்கத்து முந்துபுல வோனே. (உஅ)

## தோழிதேற்றல்.

புலந்தொகுத்தோர் போற்றுங் குமரேசன் பொன்மன்
றிலந்தொகுத்த வாழ்வுடைய வேந்த—லலந்தொகுப்பக்
காணா னருள்புரிவன் கண்டாய் கவலொழிதி
பூணா ரிழையாய் புலர்ந்து. (உக)

## இயல்பினைத்தேற்றல்.

புலம்பெறுமாற்றினுழிதரல்தீர்ந்ததுபோகட்டென்று
நலம்பெறுமாற்றிற்குறையிரந்துய்தனமதியல்பாம
அலம்பெறமவ்வவர்வேட்டனவேட்டாங்கருளுமியல்
பொலம்பெறுசிற்றம்பலத்திற்குமாரன்றன்பூங்கழற்கே. (௩0)

---

## உரிமையுரைகூறல்.

புரையாக்கிடந்தனவெல்லாந்தவிர்த்துப்பொதுவதனில்
விரையாக்கலிசெய்குமாரப்பெருமான்மிசையருளால்
உரையாகக்கிடந்தவிம்மும்மணிக்கோவையுவனடிக்கே
வரையாக்கவினெறுடையாயுரித்தாகுமிவ்வையகத்தே.

சிதம்பரம்

# குமரவேள் மும்மணிக்கோவை.

முற்றிற்று.

ஓம்.

# குமரவேள்

# மும்மணிக் கோவை

## அருங்குறிப்பு.

---

### விநாயகர் துதி.

குலவல்-விளங்கல். குறிக்கொண்டு - உறுதியாகக்கொண்டு. சண்டுக் குறிக்கொள்வோர் அடியவர். நித்தன்-சிவபெருமான். பொலிதல்-தேவர் கயமுகாசுரனை வென்று விளங்கல். கற்பக மென்றதற் கேற்ப அன்பு நீராகவும் நெஞ்சம் புலமாகவும் உருவகிக்கப்பட்டன. பொற்புறுத்தல்-பொற்புறுவித்தல்.

நூல்—க.

கிளத்தல்-சொல்லுதல்.

க. தேமணம்-தெய்வமணம்.

ங. காண்தக-அழகுதக்கிருக்கும்படி.

௪. முற்பயன் பிழையாது அப்பயன் கொண்மார் - பழவினை தவிராது அதன் பிரயோசனத்தை நுகரும்படி.

டு. ஈரிருபிறப்பு-அண்டசம், சுவேதசம், உற்பிச்சம், சராயுசம் என்பன.

சு. எழுதிறம்-எழுகூறுபாடு. அவை தேவர், மனிதர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்பன. அவற்றிடம்-அவற்றிற்கிடம்.

கஉ. தவலல்-கெடுதல்.

கரு. இடன்வரைத்து உன்கி-இடத்தை அளவு படுத்திக் கருதி.

கஎ. மேனிலம்-சுவர்க்கம்.

உ0. ஆகன்மாற்றின்-ஆதலினாலே. எண்ணுவரம்பு - அளவையின் முடிபு.

உஉ. பிறவியென்றது மக்கட் பிறவியை.

உங. பேறு-பெறுதல்.

உ௪. நன்று-நன்மை.

உடு. முளிபுல்-உலர்ந்தபுல்.

ஙஉ. படர் இவையோடு நிற்கு எவனோ தொடர்பு-துன்பத்திற்குக் காரணமாகிய இவற்றுடன் நினக்கு யாது சம்பந்தம்?

ங௪. ஏர்பு-எறி.

௪0. மறை - எதிர்மறை. எனவே பெருமை என்றபடி. "அண்டங்

க ளெல்லாமணுவாக வணுக்க ளெல்லா,மண்டங்களாகப் பெரி தாய்ச் சிறிதாயினன்" என்பது திருவிளையாடல் பாயிரம்.
சச. பேர்தருகுறி - பேராற் குறிக் கப்படும் உருவம்.
சஎ. கொடுவரி-வியாக்கிரபாதர்.
சஅ. அரவு-பதஞ்சலி.
ரு0. படிவு-வடிவு.
ருரு. அகம் எழனுருபு.
ருரு. வேணவா-மிக்க அவா. அறிவு வேணவா செயல் முறையே ஞானம், இச்சை, கிரியை
ருஎ. யாதும்-சிறிதும்.
சுக. நெஞ்சே! ருஉ. இறைவன் அடிக்கமலம் அகம் பூப்பப் ருஎ. புலனிலே நிறுத்துபு ருகூ அன் பின் வழாது சுக அமைவு கூ ர்ந்து சுஉ. இடரைத் துரப்பி சுரு உய்தி என்று சுச. அறை மொழியினுய் ஓர்ந்து சுசு. பே று பெறலாற் களிமதி.

உ.

ஏக்கறுதல் - ஆசையாற் றாழ்ந்து நிற்றல். தாக்கற்று - ஒருபற்று மில்லாது.

௩.

கஞலல் - கலத்தல். எண்பெற்ற- தியானத்தாற்பெறுகின்ற. தன் னென்றது-வண்மணியை.உண் பெறல்-அனுபவமாதல்.

ச.

கையுறை - கையிலுறுவது. என் றது இங்கே மனமொழி மெய் களை. எல்-எற்றுக்கொள்க. கட் டுரை-பொருள் பொதிந்தவுரை.

க. மணி - மண்ணுதலாற் போந்த பெயராதலிற் காரணவிடுகுறி யாயிற்று. மண்ணுதல் - சாணை தீற்றுதல்.
உ. வரையாது-நீங்காது.
ரு. கைக்குரிய - வளப்பமாவது ஈ கையேயாம் என்னுமுறை.
எ. துள்ளி-விரித்தல் விகாரம்.
௧0. ஈம்-ஈயும்.
கக. தலைவன் - வருணன். ஆசை- திக்கு.
கச. தலைவி தலைவனைப் பிரிந்து இரங்குதலினும் அவனோடுகூடு தலினும் கூட்ட நிகழாமையின் ஓராற்றியையெனப்பட்டது.
கரு. உட்புறம், புறப்புறம் என்பன வற்றுள் புறம் எழனுருபு. உள்- மனம். ஒட்பம்-ஞானம்.
கஎ. தன்னைச் சிவனுதலாவது யாறு,தன்னின் மூழ்கினோர்க்கு அகமாசு கழுவி ஞானத்தையும், உடன்மாசு கழுவிப் பிறவற்றை யும் பெறுமாறு கொடுத்தல் போல, மூழ்கியவருந் தம்மை யடைந்தார்க்கு அவ்வாறு கொ டுக்குந் தகுதியராகச் செய்தல்.
ககூ யாறு மருதத்தைவளமுறுவித் துத் தன்னோடு கலத்தலின் தானும் அம்மருதத்திற்கு உபக ரித்தல் வேண்டுமென்பது கரு தியோ?
உரு. விழை-உவம உருபு.
உஅ. சந்திரனிடத்தே மலர்ந்த நீலம்போல முகத்திலே மலர்ந்த கண்ணுடையராகிய, மேகத்தை நோக்கும் மயிலைப்போல விளை வை நோக்கும் உழத்தியர்.

௬௬. ௬எ. நாவாய் கால் என்பன சிலேடை.
௨௬. தோளார் ௨எ. முலையார் ௬0. விழியார் ௬௨. மஞ்ஞையென ௬௩. விளைவு ௬௪. விழையும் உழத்தியர்சூழ் ௬௫. புலம்.
௨௨ தக்காரக்கீகைதலைப்-பட்டிடின் ௨௩ பொருள்கள் எய்திடும் என்ற ௨௫. உரைத்திறனுலே ௬௬. நெறறிரளை ௬எ. உண்டு ௬௮. செலீஇ நிறீஇ ௬௯. செழிக்குமென்கின்ற இதற்காகவோ?
௫. கன்மேந்திரியங்களி லொன்ருகியகையின்ருெழில் தானமென்பதுபற்றி இங்ஙனங் கூறப்பட்டது.
௨௨. தக்காரக்கீயின் ஒன்று பல வாய்ப பெருகி வருமென்பது "உறக்குந் துணையதோராலம் வித் தீண்டி, இறப்ப நிழற்பயந் தா அங் - கறப்பயனுந், தான் சிறி தாயினுந் தக்கார்கைப் பட்டக்கால், வான்சிறிதாப போர்த்து விடும்." என்றதினறிக. நாலடி. அறன்வலி யுறுத்தல்.
௪௫. கணிததல் செல்லா உரு-மனத்தினுலும் இவ்வளவென்று அளக்கமுடியாத உருவம்.
௪௮. நோதகவு-துன்பம்.
௪௯. விரும்பின தரூஉம் இயவுள் பெரும்பெயர் தரூஉம் இயவுளென் இறையும். விரும்பின-இம்மையின்பங்கள். பெரும்பெயர்-பெரும்பொருள். அது வீடு.
௫௫ உயரி - உயர்ந்து.
௫௯. உடம்பிடி-வேல்.
௬௧. மல்கியன்றிச்செல்கலா வினை-அனுபவமாயினன்றி நீங்காத ஊழ். "ஒழிகென வொழியா தூட்டும் வல்வினை" என்பது சிலப்பதிகாரம் நாடுகாண்காதை.
௬௨. அல்லாந்து-வருந்தி.
௬௪ "பொன்னர் திருவடிக் கொன் றுண்டுவிண்ணப்பம்" தேவாரம். திருநாவுக்கரசு சுவாமிகள். திருத்துங்கானைமாடத் திருவிருத்தம்.
எ0. மன்னிய-மன்னும்பொருட்டு.

## ௫.

காபாலர் மாபாலர் பூபாலரெனக்கூட்டி இந்திரன், விண்டு, பிரமனெனக் கொள்க. ஆம்-உரிமை, இன்புறுதற் கேதுவாகிய உரிமைய பொருள்கள். தில்வவனம் - தில்லைவனமாகிய சிதம்பரம்.

## ௬

குறை - இன்றியமையாப் பொருள். அது 'வினைக்கண்வினை கெட லோம்பல் வினைக்குறை, தீர்ந்தாரிற் றீர்ந்தன் றுலகு" என்பதனுனுணர்க. திருக்குறள். ஆள்வினையுடைமை.
ஏனைப்பொருள் மண், பொன். சவி-ஒளி.

## எ.

ஓம்படை-காவல்.
௧. பலமுகமாக எனமாறுக.
௨. உலபபில்காலம் - முடிவில்லாத காலம்.
௪. குரவனின்-குரவனைப்போல.
௫. இருவேறியற்கை-திருவுடையராதலும் தெளிவுடைய ராதலும்.

எ. தற்பயன் - இச்சரீரம் பெற்றமையின் பிரயோசனம்.

அ. அரிதின் உய்க்கும் வைகல்-அரிய காரியங்களில் உபயோகிக்குங் காலம்.

கஉ. பிரணவத்தை முன்னே உடைய மொழியென வியையும். பிரணவ விளியுமாம்.

கடு. ஒலி, பெரிதாய்த் தோன்றி வரவரத் தேய்ந் தொழிதலான் மடவோர்செய்திக்கும், தோன்றும்போதே நாற்றிசையும் ஒருங்கே பரவுதலான் அக்கினிச் சுடருக்கும் உவமையாயிற்று.

கஅ. தோற்றரவு-தோன்றுதல்.

உக. பதநிலை கலைக்கெலாம் முதனிலை - பதத் தொகுதியாகிய நூல்கட்கெல்லாம் முன்னேநிற்பது. (முதனூல்)

உஉ. வரையாமறை - எழுதாமறை. சுருதி என்றபடி.

உச. துறைவழிமேவ - நன்னெறியிலே அறிவுசெல்லுதலால்.

உரு. அறு என்றது தொழிலை.

உசா. தவிர்வது-விலக்கு.

உஎ. செய்வது - விதி. பயன்-தீர்த்தி.

உஅ. எச்சமின்று-குறைவில்லாமல்.

ஙo. இச்சை ஞானத்தொடக்கும், அறிவளிக்குந்தலின்.

ஙஉ. பொதுவறிவு இஃதொன்று தோன்றுகின்றதென்பது. ஐயம் அதுவோ இதுவோ என்பது. திரிபு ஒன்றை மற்றொன்றாய்த் துணிவது. உணர்வாவது பெயர் சாதிமுதலியவற்றால் சவிகற்பஞ்செய்து புலப்பட வறிவது. மா ஒன்றன்பெயர், மாத் தன்மை சாதி, அதன்வண்ணம், வடிவம் முதலியன குணம், நிற்றல், தளிர்த்தல், பூத்தல் முதலியன கன்மம், மாமெனநிலைபெறுதல் பொருளாகை. இதுவே சவிகற்பவுணர்வு.

ஙஎ. கண்கூடு-பிரத்தியக்ஷம்.

சஉ. வரைகுநை - கொள்ளுகின்றனை.

சங. முதுக்குறைவு-பேரறிவு.

சஅ. அருங்குரைத்து-அரிது.

அ. அரிதின் உய்க்கும்வைகலை கூ. வறிதுபோக்குற்று கo. உழிதருவேமும் கக. அறிவுகொளல்வேண்டி கஉ. எஞஅ கங. எஞஅ உo. எஞஅ உக எஞஅ உஉ. மன்னும் உங மறையை க. ஒருங்கி உ. தூக்கி ச. செய்குரவனின் உங. அருளினை.

உகூ-சகூ. பொதுவறிவும் ஐயமுந் திரிபும் உணர்வும் முதுக்குறைவும் ஆகிய இவற்றை முந்துறுக்கும் ஞானகாண்டம்.

ருo. மறையள் பிரணவத்தொடு புணர்த்து முருகக்கடவுள் நாமம் மும்முறை கூறியிருப்பதை "வேதம் ........முக் கனல்சூழ் வேள்வியிற் சுப்பிரமணிய னோமெனவே முக்காற்கூறும்" என்பதினறிக. காஞ்சிப் புராணம் குமரகோட்டப்படலம். கசு.

ருச. அறக்கழிவு-பாவம்.

ருரு. கிம்பிரி-பொருமை.

ருஎ. விழுக்காடு-குலைறவு.

சுஅ. பேறு-பெறுவது. அது முல்லையென்னும்பெயர். முல்லை-கற்பு. முல்லை மகளிர் சிரித்தலால் ம

லர்வதாகலின் இவ்வாறு கூறப்பட்டது.

எக. ஆய்ச்சியர்நக, சுசு. கற்புப்பிறழாது சுஎ. கைபோதந்த சுஅ. பேறு யாண்டும் சுகூ. பிரியாது உடன் வாழ் வாழ்வின் நின்றேமை எ0.நகுதல் மீக்கோள் இலை எக. என்று எதிர்நக்க எங. தளவு.

எங. தளவு-முல்லை.

எச. பொருள்புகன்றென மாறுக.

எசு. வாயில் - இந்திரியம்.

எஎ. புலம்புரிபயன்-அறிவாலடையத்தக்கபயன்.

அ0. மடை-நீர்கொள்ளுமிடம்.

அச. அணிந்த-அலங்கரித்த.

அசு. அகவல்-ஆடல்.

அஎ. உணங்கும்-உலரும். உமட்டியர் - நெய்தற்பெண்கள்.

அகூ. பாக்கம்-நெய்தனிலத்தூர்

கூரு. ஒழுக்கிய-ஒழுங்குபடுத்திய.

அசு. புன்னை இருந்து அஎ. ஒப்பிய உமட்டியர் அஅ. குரவை அயரும் அகூ. பாக்கத்து உமணர் கூ0. புனலுலகுந் திரிதந்து கூஉ. பிறங்குவேழுக்கு கூரு. வரை வளம் படுக்குநர் எங. முல்லைவளம் படுக்குநர் அக. பணை வளம்படுக்குநர் அஉ. எல்லாமியங்கல் அங. மண்ணுலகன்றி ஒன்று மின்று ஆயின் கூங. எதிராவரோ? என்று இயம்பி கூச. உலாய கூரு. கழியென்க.

௪.

மகள் - பெண். முறைப்பெயரன்று. நிறை-கற்பு. பறை-ஒலி. குமரவேளோ! தழா தொழியின் னைதருள் எவ்விடத்தது?

க0.

க. தலைநாள் - அநாதிகாலம்.

உ. கப்புதல்-மூடுதல்.

ங. ஐயவி-வெண்கடுகு.

ச. உறுகல்-பெருங்கல்.

ரு. கையறவு - செயலறுதற் றுன்பம்.

எ. எமியேம்-யாங்கள்.

அ. ஈங்குத்துய்ப்பன-திருஷ்ட கன்மங்கள்.

கூ. ஆங்குத்துய்ப்பன - அதிருஷ்ட கன்மங்கள்.

க0. இருவயிற்றுய்ப்பன - திருஷ்டாதிருஷ்டகன்மங்கள்.

கங. வீடு-விடுதலை.

கசு. எழுநாவன்னி-காளி, கராளி, மனோசவை, சுலோகிதை, சுதூம பரவருணை, புலிங்கினி, விசுவ ரூபை என்னும் ஏழு நாக்குக் களையுடைய அக்கினி. இவற் றின்பெயர் இரணியை முதலாகவும் கூறுவர்.

உங. கருவி-காரணம்.

உசு. உய்த்துணர்காட்சி - பகுத்தறிவு.

உகூ. இடையறவுபோக - நடுவிலற்றுப்போகாமல் (இடைவிடாது.)

ஙக. ஆதியான்மிகம், ஆதிதைவிகம், ஆதிபௌதிகம்.

ஙஉ. நடவுதல்-செலுத்துதல்.

ஙங. எண்ணமின்றி முறுகிய புண்ணியம்-அபுத்திபூர்வ நல்வினை.

ஙரு. அடிப்பட-ஆதாரமாக.

ஙசு. இன்னுங்கு-துன்பம்.

ஙஎ. 'தெய்வமென்பதோர் சித்தமுண்டாகி' திருவாசகம். போற்றித்திருவகவல். சஉ.

சஎ. மயர்வு-மயக்கம்.

௪௮. பிறக்கிட்டு - முதுகிட்டு.

௭. எமியேம் ௨. இருளில் ௫. நோதல் ௬. தவிர்ப்பான் ௧௧. ஆசாமியமும் ௧௩. அமர் சஞ்சிதவீடு கூடி ௧௫. வாழ்வின் உறைதரு மாறு ௧௮. சத்ருத்துணையாக ௧௯. மாயையின் வினை துய்ப்பான் ௨௪. போகமும் பிறவும் ௨௫. தந்ததூஉமன்றி ௨௬. உய்த்துணர் காட்சி (தந்து) ௨௮. உதவி ௨௯. புரிந்து ௩0 வினை ௩௪. முந்நெறியான் விடுத்து ௩௨. நடுவு நாண்முறையில் ௩௪. புண்ணியம் ௩௫. ர ௩௬. இன்னுங்கு ஒழிய ௩௯. செய்து ௪0 மகிழ் ஆர்வத்து ௪௩. சரித்து ௪௪. கைவந்திடுநாள் ௪௫. அணுகுபு ௫0. அருள்புரிந்து என்க.

௬௫. பற்றூது-நிலைத்திராமல்.

௬௬. அவாக்கு-அவாவுக்கு.

௬௭. 'எய்யாமை-அறியாமை.'

௭௨ ஆறுமை-நீங்காமை.

௮௪ ஈட்டியசாந்தம்-தேடும் இயற்கையுடைய அமைதி.

௮௫. உரக்கோல்-வலியஅம்பு.

௮௬. இறவுளர்-வேடர்.

௯௨. மையாந்திட-மயங்க.

௯௩. கவின்று-அழகைக்கொண்டு.

௭௮ - ௯0. கொடிகள் மரம்; சுனை அருவி; கம்பியன் எழுதிய தாளம் அருவி மருங்கிற்கிடந்த மணிகள்; காவலர் இறவுளர் இவை முதலியவற்றால் மாடங்கள் மலைகளை நிகர்த்தன.

௭௩. செம்மால் ௯௪. நகரோய் ௯௬. அண்ணல்மணியே ௯௭. தலைவ! ௭௬. ஆவதூஉம் ௯௮. உணர்குதி.

௧௧.

இடுகும் - ஒசிகின்ற. வடுகிடந்த கண்-வடு கிடந்தாலதனையொத்த கண். ஆம்-ஜலம். எழிலிவரவு தலைமகன் வரவைக் குறித்தலின் கிடைநிலையிற் போமுன் தோழி அதனைக் கூறினாள்.

௧௨.

அந்தமாமது - அந்த அனுபவமாகியதேன். மந்தமின்றி - சோர்வின்றி.

௧௩

௨ ஆவயின்-அவ்விடத்து.

௮. உரைமணமிறந்தஉறுபொருள்-வாக்கு மனதீதமாகிய பரம்பொருள்.

௧௧. அறிநிலை-பாசவறிவு,பசுவறிவுகளாலறியுந்தன்மை.

௧௩. யவனர்-சித்திரக்காரர்.

௧௬. ஞானியர்.

௧௭-௨௧. இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி முறையே காண்க.

௨௫. யோகியர்.

௩௨. கிரியையர்.

௩௩. புறத்தொழில்-நன்னெறிக்குப் புறம்பான பாவத்தொழில்.

௩௬. சரியையர்.

௩௮. கோல்-தராசுக்கோல்

௩௯. ' கந்தழியாவது ஒரு பற்றுமற்று அருவாய்த் தானேநிற்குந்தத்துவங் கடந்த பொருள் '

௪௧. நடலை-பொய்.

௪௨. முடலை-முறுக்கு, வளைவு.

௪௭. நொதுமலர்-அயலோர்.

௫௪. எக்கழுத்தம்-தலையெடுப்பு.

சு0. ஐயரும் பாசம்-ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதாயி.

சுடு. கொண்டி-கொள்ளை. குவலயக்கு-பூமிக்கு.

அ-சுஎ. அ. உறுபொருள் தானும் கூ. பரந்தும் முனைபபுழிக0. ஒருவலின் கக. புறம்படுத்துச் கஉ. சிறந்து கரு. துய்த்து இருக்குநர் கஎ. ஒருங்க கஅ. பயின்று கசு. மடங்க உ0. நேசித்துச் உக. சமாதியின் உச. ஏகமாகிப உடு. பிறங்குநர் ௩உ, பொலிகுநர் ௩௩. குலவுநர் (இவர்க்கு) ௩எ. வினை ௩அ. கோல்போறலின் ௩௯. கந்தழியெய்துவர் ௫ச. எஞ அ .........டுடு. தேறுகிற்றிலம்.

சுடு. குவலயக்குக்கொண்டி என்று சுசு. வாழ்வு அளித்த சுஎ. வள்ளால்.

எக. கிடை-வேதத்தை ஒரு சேரச் சொல்லுவித்தல்.

எச. புலன் உழுது உண்மார்-அறிவால் உழுது பயன்கொள்வோர்.

எஅ. உள்ளறைபோதல் - மனநிலை தளர்தல்.

அக. முள்ளரைக்கொடி - தாமரைக் கொடி.

அடு பழுநிய-முதிர்ந்த.

கூ0. உயவுஇலாதமயல் - நினைவை இல்லாததாகச் செய்கின்ற மயக்கம் : உயவு-நினைவு.

கூக. குருகு பெயரியவரை-கிரவுஞ்ச மலை.

கூஉ. அறிவு பெயரிய வேல்-ஞான வேல்.

எகூ. ஆடவர் அ0. தம்வழிப்படூஉம் வரம் இரப்ப எஎ. மங்கையர், அ௩. மார்பின் அச. ஒச்சிய அடிச்சிலம்பு

கூடு நன்று-பெரிது.

எ0. அதனால் கூடு. நின் திருவடியன்றிப் பெரிய பொருள் மற்றிலை.

கடு.

மொழி " வேண்டுவார் வேண்டுவதே யீவான் கண்டாய்" என்பது முதலியன. தட்குதல்-தடைசெய்தல்.மொழியைவினை தட்குதல் என்னமுறைமை ?

கசு.

௩. அற்றம் - சோர்வு.

ச. இனமாவது ஈண்டு மக்கள் யாக்கை.

அ. உடுத்து-உடுத்த.

கஉ. கலாய்த்து-வேறுபட்டு.

கஅ. புடைபெயர் வாயில்-கன்மேந்திரியம்.

உசு. ஐவகைத்துயர் கருப்பாசயப்பை உறுத்துதல், அதிற் சலம் பூரித்தல், உதராக்கினியா லெரிப்புண்ணல், பிரசூதவாயு முரித்துத் தள்ளுதல், யோனித்துவாரத்தால் நெருக்குண்ணல் என்பன.

உஎ. பிறந்தை-பிறப்பு.

௩0. அமலல்-தங்குதல்.

சஉ. இடையகம்-உள்ளிடம்.

ச௩. ஆய்தக்குறி-ஆய்தவெழுத்து.

சச. குழிசி-பானை. முரவை-தவிடு.

சஎ. சொன்றி-சோறு.

சக. குய்-தாளிப்பு. கருனை-கூட்டு.

டுஉ. சுமடு-சும்மாடு.

டுக. கமநிறைந்து - மிகநிறைந்து.

சு0 ஐவகை யமளி-பஞ்சசயனம். " சிறுபூளை செம்பஞ்சு வெண்

பஞ்ச சேனை - முறுதாவி சேக்கையோ ரைக்து.”

௬எ. நுழை-நுட்பம்.

எ௦. தழீஇ-தழாவிய.

எக. மிடைந்து-அணுகி.

அ௦. கலம்-மரக்கலம்

அக. பண்டமாற்று-பரிவர்த்தனம்.

அஉ. கவர்க்கும்-பிளவுபட்ட. இவறல்-உலோபம்.

கூக. உறவர்-மேலோர்.

௱க. அறநி-பாசம். கொடை-கொடுக்கும்பொருள்.

௱சா. உருத்து-கோபித்து.

௱கரு. மயற்கை-மயலின்சிறுமை.

௱க௦. சிகரி-கோபுரம்.

௱கக. குயின் அமர ௱கஎ. விண்ணிடத்துத் தாய் ௱ககரு. புங்கவரும் ௱உரு நீர்வரைப்பில் இறங்கி ௱உசா. அருளாளன் குறிகண்டு ௱உரு.குறைமுடித்துச் ௱௩௦.செம்மார் இலங்கிய சிகரியென்க.

கஎ.

மாழாமல் - மயங்காமல். புலிவாழ் கடறு - வியாக்கிரபாதர் வசித்த தில்லைவனம்.

கஅ.

பேரின்பருளுதல்-ஈண்டுப் பிரணவோபதேசஞ்செய்தல்.

கசா.

க முழுநெறி-பெரியநெறி.

உ. அறவர்ப்புரைதல் புறநலம் பூத்தற்கேகொள்க.

௩. பற்று-பற்றமுடியாத.

க௩. உடம்பாட்டிலிருந்தன எதிர்மறையாகவும் எதிர்மறையிலிருந்தன உடம்பாடாகவும் மாற்றி என்றபடி.

கஅ. இறும்பூது-வியப்பு.

உ௦. பாற்றும்-தூரத்தும்.

உச. அஞ்சுதக்கன-அஞ்சத்தக்கன, பாவங்கள்.

கஎ-உசா. கசா. திருமால் ௩. புறநலம் பூப்பப் ச. படிவுகொடு கசா. திரிப்ப கஎ. மனவலி பிறழ்ந்து உ௦. தெய்வத மிவர் கொலென்று உக. குறிசெய்து உ௩ மாதமர் படிவங் கருத்துட்படாது உச. படர் விளைத்த உரு. பதகர்.

௩௦. பதம்-சோறு.

௩உ. செம்பொருள்-பரம்பொருள்.

௩௩. ‘ தன்னை.........ஆயினேன்’ திருமுருகாற்றுப்படை, ஆசிரியர் நச்சினார்க்கினியருரை மேற்கோள்.

உஅ. பெருமான் ௩எ. செம்மல் ௩அ. விழிப்பொறி, சாஉ. நோய் தவிர்பாக்கு அருளுருக்கொண்ட தலைவன்.

சாச. மள்ளர்-மருதநிலமாக்கள்.

சாஅ. மிளை-காவல்.

ரு௦. விறந்து-செறிந்து.

ருஉ. ஒருநெறி-ஒழுங்கு.

ருச. ஊழ்-வரிசை.

ருஅ. கூம்பு-சிகரம்.

ருக-சாஉ. பயிர், மரகதப் பந்தர்; பொற்றாமரை, பொற்சிகரம்; செந்தாமரை, விளக்கம்; வாளையலவன் செல்வமென்க.

சாசா-எக. அறம், பொருளின்பங்களையும்; பொருள், இன்பத்தையும்; இன்பந், தன்னையுமே தருதலின இவ்வாறுகூறப்பட்டது.

எஉ. காட்டம்-விறகு.

எ௩. உண்ணிலையாகி - அந்தர்யாமியாகி.

அக. காண்வர-காண.

உக.

ஒருவர் ஒருவர்க்குக் கண்போ ன்றவரெனப்படின் அவர்க்கு அமையம் நேர்ந்தபோது உதவி புரியத்தக்கவராதல் வேண்டு மன்றே? நீவிர் கண்போன்றவ ரெனப்பட்டும் எனது துயரம் குமாரற்குக் கூறிலிர் இஃதோ நமக்குப் பெருமை என்று ரௌகக.

உஉ.

க. பீடு - பெருமை. அலமந்து-சுழ ன்று.

உ. அஃகுதல்-சுருங்குதல்.

ச. குறை பெய்தல்-குறையை நீக் குதல்.

ரு. இங்கிதம்-குறிப்பு.

கO. மறுவல்-மறுபடி.

கா. பெருநீராளர் சிலேடை.

கரு. கொன்னே-வீணுக.

உO. முடிக்கஅரும்-முடித்தற்கரிய.

உகூ. கதிப்ப-சிறப்ப.

ககூ. கண் இலாது-தாக்ஷணியமில் லாமல்.

கூஉ. மறுக்கம்-மயக்கம்.

கூசு. பாடுகிடத்தல்-வரங்கிடத்தல்.

சஎ. சலநிதி, அம்புராசி, ஆர்கலி என்பனசிலேடை.

ருரு. அல்லுழி-அல்லாதவிடத்து.

எக. உராய்-உலாவி.

சுக. நாவாய் சுகூ. பெருநீர் எஅ. பரவை சிலேடை.

உகூ. இவள் இஞ்ஞான்று கூO. குரு பாற் குறித்து கூச. வேண்டுநர் கூசு. பாடுகிடந்த பொன்மன்று கூஎ. எந்தாய் கூகூ. குரிசில் சO. உயிரே எளியோய் சக என்று சஉ. கலுழ்ந்தனளாகிப் சகூ. பே தையாயினளை சச. பேற்றை சரு. விளக்கை சசு. அமிழ்தைத் சக. துயருறுத்தி ருO. ஆர்கலி செய்குதி.

உகூ.

உறவு-அன்பு. பிறவாற்றிலவாம்-பிறநெறிகளிற் செல்லுதலில் லாத. திருவினோர்க்கு இல்லை உடையார்க்கருளும். என்க.

உச.

நீடல்-காலநீட்டித்தல். படர்-துன்பம். நின்பெயர் அம்சமென் பது. யோகியர், ஹம்ஸ. ஸோ ஹம். எனப்பாவனை செய்து பயன் பெறுவரென்பது யோக நூன்முடிபு. காதலர் - ஈண்டு யோகவேட்கையுடையவர். தந்தி தந்து-காலம் வாய்ப்ப. அம்சமெ ன்னும் பெயரே பயன் பெறு தற்கேதுவாயின், அதன் பொரு ளாகிய நீபயன் பெறுதற்கேது வாகாதிருபபது முறையன்றெ ன்பது கருத்து.

உரு.

க. வறன்-வறுமை.

உ. ஆறு-வேதாங்கங்கள்

ச மூன்றுபகல்-காலை யுச்சிமாலை. ஆறுதொழிலாளர் தருப்பண நீர் விடுத்தாற்போல, மங்குல் காலம் பொய்க்காது உறைபி லிற்றுங்கோடு.

அ. உறை-துளி.

கக. வெளில்-கட்டுத்தறி.

கஉ. காழ்-வயிரம்.

கஈ. ஐவனங்குறுவ-மலைநெல்லைக் குற்ற.
கஅ எழிலைம்பாலை - யானை மதம் போல் நாறுமொருமரம்.
கக. புய்க்கல்லா-பிடுங்கமுடியாத.
உகூ. அட்டி-சொரிந்து.
உக. பக்கத்து முடிபபது கொண்டை; பின்னேசெருகுவதுசுருள்; சுருட்டிமுடிப்பது குழல்; பின்னிமுடிபபது பனிச்சை; உச்சியின் முடிப்பது முடி.
ஙச. மதுகை-வெற்றிப்பாடு.
ஙகூ. தாமரை காமத்தை நினைப் பூட்டுவது.
ஙஅ. நீலம் கொல்லுவது. இவை மதனம்புகள்.
சo. ஆடவர் சிலேடை.
சகூ. என்னவும்-எவ்வளவும்.
ருக. போக்கு-குற்றம்.
ருஉ. ஆசறுகாட்சி - குற்றமற்ற அறிவு. அது நிருவிகற்ப ஞானம்.
ருகூ. கொங்குரை-மாற்றுயர்ந்த பொன்.
ருஅ. புற்கெனல்-பொலிவிழத்தல்.
சுo. கதழிய-வேகங்கொண்ட.
சுஅ. செழூவிய-செழிய.
எக. புகலா இன்பு - உரையளவிலடங்காத வின்பம்.
எரு. இம்மியும்-மத்தங்காய்ப் புல்லரிசி யளவும்.
எஎ. புலம்பு-வருத்தம்.
அo. சாம்பிய-வாடிய.
கூஅ. பனுவல்-திருமுருகாற்றுப் படை.
சகூ. முலையினள் ஆதலை (இளமையினை யுடையாளென்பது கருத்து) என்னவுங் கருதாது சஎ. உட்புகுதந்தகள்வ! சஅ. கவினுள் சகூ. ஆர்த்தனுான்று தொட்டு ருo. இன்பங்கிடைப்பான் ருஉ. ஐயர்போன்று ருச. நிறுத்துத் ருரு. தகவு பிறிதாகிப் ருஅ. புற்கென்று ருகூ பீர்பூப்ப. சுஉ. நாசி காற்று நல்க சுஙு.உண்கண் சுச.நீர்த்துளி சுரு. சிதறக் சுஅ. கொடி சுகூ. சாய்ந்தெனக் எo. கிடந்து எரு. நாணம்பூணாது எகூ அராற்றிப எஎ. புலம்பு கூர்ந்த பாவை.

## உஎ.

இகப்பற-நீக்கமில்லாது. அருண்மோ-அருளுமா? வனை-அழகு.

## உஅ.

க. சார்வு-வாழிடம்.
உ. பிறுண்டின்றென்று - பிறவிடத்திலில்லையென்று. இருல் மதியையும் தண்டலை வானத்தையுங்காட்ட
கஉ. குரா-பாவைபோற்பூக்குமோர் மரம்.
கஙு. விழைதக-விரும்ப
ஙஎ. பொலிமே-பொலியுமே.
ஙஅ. கூலம்-பலபண்டம்.
சக. புளினம்-மண்மேடு.
சஎ. சண்ணித்த-பூசிய.
ருo. "நிலையிற்றிரியாது"...குறள்.
ருகூ. இருமை இன்பு-இம்மை மறுமை யின்பங்கள்.
ருஎ. பிரமா முதலானவர் வேள்விக்குரிய முக்கிய அங்கத்தினர்.
ருஅ. வேறு வேறுருவிற் கூறுபடு குண்டம்-வெவ்வேறு வடிவமாக அமைக்கப்படுங் குண்டம். அவை நாற்சதுரமுதலியன.

சுச. தன்வினை பிறவினை - யாகுஞ் செய்தல் செய்வித்தல்.

சுசு. ஒல்லா-முடியாத.

எரு. உயிர்வருக்கம் படம் போறலின் எஎ. அறிவு கொளல் எண்மையதன்று. எண்மை-எளிமை. ஆதலாலென்பது ஆலெனக்குறைந்து நின்றது.

எஅ. கண்ணுக்கு ஒளியைக்கொடுத்துப் பொருளைக்காட்டுஞ் சூரியனைப்போல.

அ0. அக. மனுஸ்மிருதி.

அஉ. பகல்-நடு. நுந்தா-தள்ளாத.

அச. உடீஇப-உடுத்த.

அரு. அறிவறிதல் - பரம்பொருளை அறிதல். 'அறிவையறிவது பொருளென வருளிய பெருமாளே' என்பது திருப்புகழ்.

கூஎ புறக்குடிமூன்று-அநுலோமர், பிரதிலோமர், சங்கரசாதியார்.

கூகூ. திணை-நிலம்.

க00. நியமம்-கடைவீதி.

க0க. வல்லாங்கு-இயன்றவாறு.

க0உ. ஒவ்வாமை - நிறத்தால் ஒன்றோடொன்று பொருந்தாமை. குரு-நிறம்.

க0சு. புரிமுகம்-கோபுரம்.

கக0. அத்தாணி-அரசிருக்கைமண்டபம்.

ககரு மறைமுதன்மனு-பிரணவம்.

ககசு. விடைநிறுத்தாதால் - விடைகூறாமையால். முழைஞ்சு-குகை.

ககக. சத்து.

கஉ0. சித்து.

கஉக. ஆனந்தம். சச்சிதானந்த வடிவமுடையையாயினும்.

கஉரு. தாமறியளவை - தாமறிந்தபடி. பொருக்கெனல்-விரைவுக்குறிப்பு.

கஉஎ. பண்பு தொகுவது ஆறுகிய முகம். வினைதொகுவது ஆறிய முகம்ஆம். எனவே சாந்தமாகிய ஆறுமுகங்களோ டென்பது கருத்து.

கருக. மறிதல்-குறுக்கிடுதல்.ஒய்யெனல்-விரைவுக்குறிப்பு.

கருசு. போக்கு-இந்திரியங்கள் பிறவிஷயங்களின்மேற் செல்லல்.

கருசு. பொருள்களைக் கண்டுதேர்ந்துமென்க.

கருஅ. இடரின் இரங்கி கருகூ. நண்ணரின்நசைகூர கச0. அழுங்கும்நெஞ்சு.

எரு. உயிர் உடன்முதற் பெற்றுப் படம் போறலின் எசு. நலம் வேட்குநர் நலம் உஞற்றுப எஎ. அது அறிவுகொளல் எண்மையதன்று அதனால் அ0. சொன்முறை தெருட்டி அளித்த அரு. மனு.

அரு. இரணியவருமன், ரூஎ. ஒருபால் பொழில்வளம் பொலியும் ருக. ஒருபால் தாழைதெரிக்கும் ருஉ. புறங்கிடந்த உள்ளகத்து கூஅ. மறுகுபலபோக்கி க0க. வகைஇ க0ச. இயற்றி க0சு. புனைதந்துகக0. பொன் வேய்ந்திட்ட அத்தாணி எ0. பேற்றினர் எக. பழிச்ச ககக. உவந்த கிழவ ககஎ. கடவுளேறே ககஅ. குமரநாயக கசசு. புலவோனே கஉஉ. சச்சிதானந்தப் பெற்றியையேனும் கஉச. போற்றுநர்க்கு கஉரு. அவர்குறித்தாங்கு

௧௨௭. உருக்கோடலும் நிலையிய பண்பு. ௧௨௯. அதனால் பன்னிருவிழி முதலியன கரு. எமது கண்காணவும் ௧௪௧. உள்ளக் கோயிலில் ௧௪௫. வண்டிற் சிவணிக்குமென்ன ௧௪௪. திற கண்மறைப்பவும் கல்குமதி.

"நங்கடம்பனைப் பெற்றவள் பங்கினன், றென்கடம்பைத் திருக் கரக்கோயிலான், றன்கடன்னடியேனையுந் தாங்குத, லென்கடன் பணி செய்துகிடப்பதே" என்பது தேவாரம். திருநாவுக்கரசு சுவாமிகள். திருக்கடம்பூர்க் குறுந்தொகை.

௨௯.

தொகுத்தல்- சண்டுவசப்படுத்தல்.

இலம்-இல்லம், வீடு. அலட-துன்பம்.

புரையாக் கிடந்தன - குற்றமுடையவையாகக்கிடந்தன.

விரையாக்கலி-ஆக்கை.

உரையாக்கிடந்த-உரைத்த. வையகத்து அவனருளால் உரைத்த கோவை அவனடிக்கே உரித்தாகும்.

௩0.

அதுபோகட்டு - அவ் வழிதாலைப் போகவிட்டு. அலம-அமைதி.

# குமரவேள் மும்மணிக்கோவை அருங்குறிப்பு

## முற்றிற்று.

இந்நூல் பின்னர் உரையோடு வெளிவரும் இயல்பிற்று யிருத்தலின் இப்போது மிகச் சுருக்கமாக அருங்குறிப்பு எழுதப்பெற்றது.

ஓம்நமஃ குமாராய.

குமரவேள் திருவடிவாழ்க.



Madras : G. C. Loganadham Bros., The Guardian Press

# பரிசோதன பத்திரம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| IX | 20 | பரம்மொருளை | பரம்பொருளை |
| 2 | 5 | வரைத்து | வரைந்து |
| 2 | 26 | ஏர்பு | ஏறபு |
| 20 | 28 | முயலவிற் | முயல்விற் |
| 25 | 10 | நீறீஇ | நிறீஇ |
| 31 | 19 | வெந்தீ | வெந்தீப் |
| 2 | 17 | அகம் | உணதகம் |
| 8 | 36 | கூறப்பட்டது | கூறப்பட்டன. |